and rural electrification have been sanctioned and I am sure that during the Third Five-Year Plan period, Tiruttani will get all the benefit of the economic development.

**Sri A. GOVINDASAMY :** மிகவும் பின்தங்கிய மக்கள் வாழக்கூடிய மாவட்டங்களிலே தொழில்வளர்ச்சிக்கான நல்ல பல திட்டங்களைக் கொண்டு வருவதற்கு அரசாங்கம் முன்வருமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இதைப்போன்று மிகவும் பிற்போக்காக இருக்கக்கூடிய பகுதிகளிலே தொழில்கள் ஆரம்பிக்கும்பொழுது நான் முன்பு குறிப்பிட்டபடி தூண்டுதல்கள் கொடுக்கப்பட்டு வருகின்றன. சில வசதிகளும் செய்யப்பட்டு வருகின்றன.

**Sri T. M. NALLASWAMI :** கனம் மந்திரி அவர்கள் பதில் சொல்லும்பொழுது பிளாக்குகளை மான்யம் வழங்குவதற்காக மூன்று வகையாகப் பிரித்திருக்கிறார்கள் என்று சொன்னார்கள். அப்படிப் பார்க்கும்பொழுது, ஒரு பிளாக்கிலே ஒரு பகுதி நஞ்சை பிரதேசமாக இருந்து மற்றொரு பகுதி புஞ்சையாக இருக்குமேயானால் அங்கு வருமானம் அதிகமாக இருக்கிறது. அதனாலே அதற்கு குறைந்த மான்யம் வழங்கப்படுகிறது. இதை தவிர்ப்பதற்கு கிராம வாரியாக முற்பட்ட பகுதி, பிற்பட்ட பகுதி என்று பிரித்தால் நடைமுறையில் சாத்தியமாக இருக்கும். இதைக் கருத்திலே வைத்துக்கொண்டு கிராமங்களை இந்த அடிப்படையிலே பிரிப்பார்களா, கனம் அமைச்சர் அவர்களின் அபிப்பிராயம் என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** கனம் அங்கத்தினர் சொல்லுவது நடைமுறையில் சாத்யமாக இருக்காது. ஒவ்வொரு கிராமத்தையும் பிரித்து மான்யம் கொடுப்பதல்ல திட்டம். பஞ்சாயத்து சட்ட அடிப்படையிலே பஞ்சாயத்து யூனியன்களுக்கு மான்யம் வழங்கப்படுகிறது. அது வருமானத்தை அனுசரித்து வழங்கப்படுகிறது. பஞ்சாயத்து யூனியனிலே இருக்கக்கூடியவர்கள் பிற்பட்ட பகுதிகளுக்கு அதிகச் சலுகைகளைக் கொடுத்து முக்கியமான தொழில்களை ஊக்குவிக்க வேண்டும் என்பதுதான் இந்த திட்டத்தின் அடிப்படை.

*Irrigation Schemes (Tiruchirappalli district)*

* 2130 *Q.*—Sri P. S. K. LAKSHMIPATHI RAJ (on behalf of Sri S. LAZAR) : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the irrigation schemes for Tiruchirappalli district recommended to be included in the Third Five-Year Plan; and

(*b*) the respective date of commencement of each scheme?

**The Hon. Sri P. KAKKAN :** (*a*) The schemes to be included in the Third Five-Year Plan have not yet been finalized.

(*b*) Does not arise.

7th December 1961]

**Sri S. RAMALINGA PADAYACHI :** திருச்சி ஜில்லாவிலே மருதையாறு நொய்யலாறு திட்டங்களை முதல் பிரியாரிட்டி கொடுத்து எடுத்துக் கொண்டார்கள். ஆனால் அந்த திட்டங்கள் இந்த ஆண்டிலே துவக்கப்படாமல் நிறுத்தப்பட்டு விட்டன. வேறு எந்த ஆண்டில் இந்த திட்டங்கள் நிறைவேற்றப்படும் என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN :** திருச்சி ஜில்லாவிலே மருதையாறு திட்டம், நொய்யால் ரிஸர்வாயர் திட்டம், ஆகிய திட்டங்கள் பரிசீலனை செய்யப்பட்டு வருகின்றன. இறுதியான முடிவுக்கு வந்தபிறகுதான் அந்த திட்டங்கள் எடுத்துக் கொள்ளப்படும். எல்லா திட்டங்களையும் பரிசீலனை செய்துக் கொண்டிருக்கிறோம்.

**Sri K. ANBAZHAGAN :** இந்தத் திட்டங்களெல்லாம் ஏறத்தாழ பத்து ஆண்டு காலத்திற்கு முன்னாலே அரசாங்கத்தினால் பரிசீலனை செய்யப்பட்டிருக்கின்றன. மூன்றாவது திட்டம் துவங்கி ஆறு திங்கள்கள் ஆகியும் இன்னும் இவைகள் பரிசீலனை கட்டத்திலே இருக்குமேயானால் மூன்றாவது திட்டத்திலே இவைகள் நிறைவேற்றப்படும் என்பதற்கு அமைச்சரவர்கள் ஆதாரத்தோடு பதிலளிப்பார்களா ?

**The Hon. Sri P. KAKKAN :** கனம் அங்கத்தினருக்கு நான் சொல்லுவது என்னவென்றால் எதிலேயும் நம்பிக்கை வைக்க வேண்டும் என்பதுதான். அணைக்கட்டுகள் கட்டுவதற்கு மூன்றாவது திட்டத்திலே எவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பார்த்து, எந்தத் திட்டத்திற்கு பிரியாரிட்டி கொடுக்க வேண்டும் என்பதையும் யோசித்து அதன்படி செய்கிறோம்.

**Sri A. GOVINDASAMY :** கொடகநாறு திட்டத்தை முதலிலே நிறைவேற்றுவதற்கு அரசாங்கம் உறுதிமொழி அளிக்குமா ?

**The Hon. Sri P. KAKKAN :** எது முக்கியம், எது அவசரம் என்பதைப் பார்த்து திட்டங்கள் முடிவு செய்யப்படும்.

*Package Deal Scheme*

***2131 Q.—Sri A. R. MARIMUTHU :** கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) போர்டு பௌண்டேஷன் உதவியின்கீழ் மேற்கொள்ளப்பட்ட தீவிர சாகுபடித் திட்டம் தஞ்சை ஜில்லாவில் எத்தனை கிராமங்களில் அமுலாக்கப்பட்டது ?

(இ) எத்தனை குடும்பங்களுக்கு என்னென்ன உதவிகள் அளிக்கப்பட்டன ?

(உ) 1961-62-ம் ஆண்டில் மேலும் எத்தனை கிராமங்களுக்கு விஸ்தரிக்கப்படும் ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (a), (b) & (c) : The answer [a] is placed on the table of the House.

[a] Printed as Appendix I on pages 104–105 infra.